உ

திருச்சிற்றம்பலம்

# விநாயக வணக்கம்

(108 போற்றிகள்)





தமிழ்நாடு தெய்விகப் பேரவை

9, மகாராஜா சூரியராவ் சாலை, சென்னை-18.

## மாநிலக்குழு உறுப்பினர்கள்

திருவருள் திரு.

,, அம்பலவாண தேசிகபரமாச்சாரிய சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீனம்-திருவாவடுதுறை.

,, கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள், தருமையாதீனம்-தருமபுரம்—மாயூரம்.

,, ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள், காமகோடிபீடம், காஞ்சிபுரம்.

,, ஜீயர்சுவாமிகள்-திருக்குருங்குடி மடம்.

,, காசிவாசி அருள்நந்தித் தம்பிரான்சுவாமிகள் திருப்பனந்தாள்.

,, சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், திருஞானசம்பந்தர் மடம்-மதுரை.

,, ஞானப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், ஞானப்பிரகாச சுவாமிகள் மடம், காஞ்சிபுரம்.

,, இராமஞதசுவாமிகள், ஈசான்ய மடம்-திருவண்ணுமலை.

உ

திருச்சிற்றம்பலம்

## முன்னுரை

விநாயகர், வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளோர் வணங்கும் தெய்வம். வெற்றிகளுக்குத் தலைவர் விநாயகர்; வல்வினை தீர்ப்பவர் விநாயகர்; வாழ்க்கைப் பயணத்தின் சுமையைக் குறைப்பவர் விநாயகர்; விநாயகர் வண்மைத் தமிழில் வல்லவர்; சங்கத் தமிழ் தர வல்லவர்; அவ்வையின் தமிழில் குளித்தவர்; இன்று 'தமிழ்க்கடல்' ராய. சொ. தந்த தமிழருச்சனை மலர் வழிபாட்டில் மகிழ்கிறார்.

பல்வேறு தமிழ் நூல்களில் வண்டெனத் துழாவி இந்தத் தமிழருச்சனை மலரை ராய. சொ. தந்துள்ளார். இது தேனினும் இனிக்கிறது; தெளிந்த சிந்தனையைத் தருகிறது; தெளிவின் பயனாகிய சிவத்தையும் நல்கும். இதனைத் தந்த 'தமிழ்க் கடலைப் பேரவை வாழ்த்துகிறது.

சென்னை-18.
14—8—71

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்
தலைவர், தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சிவமயம்

# விநாயக வணக்கம்

| | | | |
|---|---|---|---|
| வேழ | முகத்து | விநாயக | போற்றி! |
| பேழை | வயிற்றுப் | பிள்ளாய் | போற்றி! |
| ஏழைக்கு | அருள்செய் | எம்மான் | போற்றி! |
| வாழ | வகுக்கும் | வள்ளால் | போற்றி! |
| சிவனார் | பெறுமுதல் | செல்வா | போற்றி! |
| சேயிழை | உமைதரு | சிறுவா | போற்றி! |
| திருமால் | தனக்கு | மருகா | போற்றி! |
| திருமகள் | மகிழுமாப் | பிள்ளாய் | போற்றி! |
| யானை | உரித்தவன் | மகனே | போற்றி! |
| யானையைக் | காத்தவன் | மருமான் | போற்றி! |
| யானையின் | கைபெறு | கோனே | போற்றி! |
| யானையால் | வள்ளியை | வென்றாய் | போற்றி! |
| யானை | மணாளனின் | அண்ணா | போற்றி! |
| யானை | முகத்தனை | அழித்தாய் | போற்றி! |

பெருச்சாளி ஏறும் பெரியோய் போற்றி!
பேணுவார் பிழைகள் பொறுப்பாய் போற்றி!
வள்ளிதெய் வானை மைத்துன போற்றி!
வல்லபை மங்கை மணாள போற்றி!
கடிமணம் விரும்பாக் கணேச போற்றி!
மடியினில் மாதினை வைத்தாய் போற்றி!

சித்தி புத்தியின் தெய்வமே போற்றி!
முத்தி கொடுக்கும் முதல்வ போற்றி!
மூலை முடுக்கெல்லாம் முளைத்தாய் போற்றி!
மூவிரு முகத்தோன் முன்னவ போற்றி!
சிதறுகாய் சிறுவருக்கு ஈவாய் போற்றி!
சிவன்தேர் அச்சினைச் சிதைத்தாய் போற்றி!
கொம்புஎழுத் தாணியாக் கொண்டாய் போற்றி!
எம்பிரான் பிறையதில் இணைத்தாய் போற்றி!
மலையினில் பாரதம் வரைந்தாய் போற்றி!
மலைமகள் மகிழுமா மணியே போற்றி!

முன்வணக் கங்கொள் முனைவ போற்றி!
பன்னிரு தம்பிகண் எண்ணினை போற்றி!

பின்னவன் முழமிடப் பிணங்கினை போற்றி!
அன்னையின் அணைப்பால் ஆறினை போற்றி!
எண்ணுவார் இடரைக் களைவாய் போற்றி!
எண்ணூர் இடர்உற இழப்பாய் போற்றி!
பரமன் மடியுறை பண்ணவ போற்றி!
பார்வதி ஈன்ற பாலா போற்றி!
அப்பம் அவல்பொறி கப்புவாய் போற்றி!
இப்புவி எல்லாம் இருப்பாய் போற்றி!

ஓங்கா ரப்பொருள் உணர்த்துவாய் போற்றி!
தீங்கெலாம் அகற்றும் செம்மல் போற்றி!
குட்டிக் குனிப்புறக் கொள்வாய் போற்றி!
பட்டி தொட்டிஎலாம் படர்வாய் போற்றி!
குளக்கரை தொறும்குடி கொண்டாய் போற்றி!
அளப்பரும் ஆற்றல்கொள் அம்மான் போற்றி!
அரசின் நிழல்அமர் அரசே போற்றி!
பரசுவார் பவப்பிணி அறுப்பாய் போற்றி!
அறுகினை ஆசையோடு அணிவாய் போற்றி!
உறுபெரு மோதகம் உவப்பாய் போற்றி!

உலகீன்ற கன்னியின் குலமுதல் போற்றி!
நலனெலாம் நம்பர்க்கு அருள்வாய் போற்றி!
மலைபோல் வருதுயர் மாய்ப்பாய் போற்றி!
கலையெலாம் கருத்துள் வளர்ப்பாய் போற்றி!
அலகிலா விளையாட்டு அயர்வாய் போற்றி!
உலகெலாம் அடக்கிய உந்தியாய் போற்றி!
மலைமகள் மடிதவழ் மைந்தா போற்றி!
நலம்நுகர் அவர்திறம் நகைப்பாய் போற்றி!
புலவர்க்கு விருந்தாய் பொலிவாய் போற்றி!
கலக வெனச்சிறார்க் கவர்வாய் போற்றி!

பேரொளி பரப்பும் பெருமுடி போற்றி!
பாரதம் எழுதிய ஓர்பிறை போற்றி!
கூருறும் மற்றைக் கொம்பும் போற்றி!
கார்என அருள்பொழி கண் இணை போற்றி!
நான்மறை பகர்ந்தருள் நால்வாய் போற்றி!
வான்குறை கேட்டருள் மாச்செவி போற்றி!
மோதக மணநுகர் மூக்குப் போற்றி!
போதகப் புண்ணியப் பொலிமுகம் போற்றி!

மண்முழுது அடக்கிய வயிறு போற்றி!
கண்அகல் உந்திக் கமலம் போற்றி!

வாரி வழங்கு,கை ஐந்தும் போற்றி!
சீறியோர் முடிபடி திருவடி போற்றி!
சிவனார் கோயிலில் திகழ்வாய் போற்றி!
தவமாச் செல்வர்சொல் தவமே போற்றி!
அம்பிகை கோயிலும் அமர்வாய் போற்றி!
நம்பினார் துன்பெலாம் நலிவாய் போற்றி!
தம்பி கோயிலும் தங்குவாய் போற்றி!
உம்பரும் போற்றும் ஒருவ போற்றி!
காளி கோயிலும் காப்பாய் போற்றி!
ஊழி தோறும் உலவாய் போற்றி!

பெருமாள் கோயிலும் பிறங்குவாய் போற்றி!
திருமால் தங்கைநற் செல்வா போற்றி!
அடியார் கோயிலும் அமர்வாய் போற்றி!
கடிசேர் அறுகணி கணபதி போற்றி!
தனிப்பெருங் கோயிலும் சார்வாய் போற்றி!
மனித்தரைக் கவர்தரு வள்ளால் போற்றி!

எங்கும் இருக்கும் இறைவ போற்றி!
மங்கலம் தொடங்கமுன் வருவாய் போற்றி!
கங்கை அணிந்தவன் கனியே போற்றி!
நங்கை உமைதரு புங்கவ போற்றி!

எளிமையில் அருள்புரி இறைவ போற்றி!
ஏழைகள் பங்கில் இருப்பவ போற்றி!
தும்பிக் கை,பெறு தோன்றல் போற்றி!
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் போற்றி!
அறிவு மதம்பொழி ஆனையே போற்றி!
குறைவிலாப் பெருங்குணக் குன்றே போற்றி!
கூத்துடை யான்தரு குமரா போற்றி!
கூத்துகந்து ஆடும் குறிசில் போற்றி!
சந்திதோறுசி இருக்கும் தத்துவ போற்றி!
சிந்தையுட் புகுந்த தேவா போற்றி!

கணநாத போற்றி! கயமுக போற்றி!
விநாயக போற்றி! விக்கின போற்றி!
எண்ணிய ஈவாய் போற்றி போற்றி!
புண்ணியப் பிள்ளையார் போற்றி! போற்றி!

,, சிவஞானபாலையசுவாமிகள், பொம்மபுரம் ஆதீனம்-மயிலம்.

,, சாந்தலிங்கராமசாமி அடிகள், சாந்தலிங்க சுவாமிகள் மடம், பேரூர், கோவை-10.

,, சுந்தர சுவாமிகள், சிரவணபுரம்-கௌமார மடம், கோவை-6.

தலைவர் :

,, தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், திருவண்ணாமலை ஆதீனம்-குன்றக்குடி.

துணைத்தலைவர்:

திரு கே. எஸ். நரசிம்மன், பி.ஏ.பி.எல்.,ஐ.ஏ.எஸ்., (ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34.)

செயலாளர் :

,, அ. நாராயணசுவாமி, பி.ஏ. (ஆணையரின் இணைநேர்முக உதவியாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34.)

மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்
துதி செயும் நாயன்மார் தூயசொல் மலர்ப்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே

—சேக்கிழார் சுவாமிகள்.




தி. பி. 2002 ஆவணி (1971) 10,000 பிரதிகள்.

பார்க்கர் அச்சகம், சென்னை-1.